7th December 1961]

கிறேன். இல்லையென்றால் ஏழை விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப்படுகின்ற ஒரு பரிதாபகரமான நிலைதான் ஏற்படும் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*24 (2)-வது பிரிவு :* மின்சார மோட்டார், பம்பு செட்டு ஆகிய வைகளை உபயோகப்படுத்தி நீர்ப்பாசனம் செய்து, விவசாயம் செய்தால் 40 சதவீதம் வாரம் கொடுக்கவேண்டும் என்று இருப் பதை மாற்றி 25 சத வீதமாகக் குறைக்கவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். ஏனென்றால் வாரத்திற்குப் பயிரிடு கின்றவர்களே மின்சாரக் கட்டணத்தையும், பராமரிப்புச் செலவையும் ஏற்றுக்கொள்ள வேண்டியிருப்பதினால் 25 சத வீத மாகாக் குறைப்பது நலமென்று கருதுகிறேன்.

*51 (5)-வது பிரிவு:* தர்ம ஸ்தாபனங்களுக்குச் சொந்தமான நிலங்களில் விறகுக்கு உபயோகப்படுகின்ற மரங்கள் விளைந் திருந்தால் அவைகளுக்கு விதிவிலக்குக் கொடுத்திருப்பது முறை யற்றதாகும், இதனால் மேற்கொண்டு அதிகப்படியான நிலங்களில் தர்ம ஸ்தாபனங்கள் விறகுக்கான மரங்களைப் பயிரிட்டு இந்த மசோதாவிலிருந்து தப்பித்துக் கொள்வதற்கு ஒரு வழி ஏற்படும் என்றும், அதனால் விதிவிலக்கு கூடாது என்றும் தெரிவித்துக் கொள்கிறேன்.

*52-வது பிரிவு :* சர்க்கார் நினைத்தால் தர்ம ஸ்தாபனங்களுக்கு இந்த மசோதாவிலிருந்து விதிவிலக்கு கொடுப்பதற்கான அதிகாரத்தைக் கொடுத்திருப்பது சரியல்ல என்றும் இதனால் நிர்வாகத்திலுள்ள கட்சியினருக்குச் சாதகமாக உள்ள தர்ம ஸ்தாபனங்களுக்கு நியாயத்தை மீறியும் விதிவிலக்கு கொடுக் கின்ற ஒரு நிலைதான் ஏற்படும் என்றும் நான் கருதுகிறேன். ஆகவே சர்க்காருக்கு இந்த அதிகாரம் கொடுக்கக்கூடாது என்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்த மசோதா தர்ம ஸ்தாபனங்களுக்கும், மடாலயங்களுக் கும் பாதுகாப்பு அளிப்பதாக இருக்கிறதே தவிர, சமுதாயத் திலுள்ள ஏற்றதாழ்வுகளைப் போக்கு வதாக இல்லை என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே இந்த மசோதாவின் அடிப் படை நோக்கம் நிறைவேறுகின்ற அளவிற்கு நான் சொன்ன கருத்துக்களை மனதிற்கொண்டு சட்ட சபையில் இந்த மசோ தாவை, நிலமற்ற ஏழை விவசாயிகளுக்கும், நிலத்தில் நேர்முகமாக இறங்கி உழைக்கின்ற உழவர் சமுதாயத்திற்கும், பொருளாதாரத் துறையில் முன்னேறுகின்ற வகையில், நிறைவேற்றித் தரவேண்டு மென்று சட்டசபை அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

M. SELVARAJ,
*Member, Legislative Assembly.*